ஸ்ரீரஸ்து

ஆழ்வார்எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

நாலாயிர திவ்யப்பிரபந்தங்களுக்குப்

பெரியவாச்சான்பிள்ளை வடக்குத்திருவீதிப்பிள்ளை

முதலான பூருவாசாரியர்கள் அருளிச்செய்த வியாக்கியானங்களிலிருந்து தொகுக்கப்பட்ட

ஐதிஹ்யங்களும் நிர்வாஹங்களுமடங்கிய மஹாநிதியான

# ஐதிஹ்ய நிர்வாஹ ரத்நமாலா.


ஆசிரியர்:

ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்.


[ஸ்ரீராமாநுஜ பத்ரிகையின் வெளியீடு.]


காஞ்சீபுரம் ஸ்ரீவேங்கடேச்வர அச்சகத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

கிடைக்குமிடம்:

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

P. B. ANNANGARACHARYA

Editor Granthamala, KANCHEEPURAM.

இதன் விலை 1 8 0

1953

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



# ஸ்ரீதிவ்ய நிர்வாஹ ரத்நமாலை

## மூன்றாவதாயிரம்—இயற்பா.

(முதல் திருவந்தாதி. பா. 1 வையந்தகளியா.)

1. (இடரித்யாதி.) மாறனேரிநம்பி, எம்பெருமானை மறக்கவிரகில்லையோ என்றாராம்.

(4. பா. நெறிவாசல்)

2. (அறிவானும்) சீராமப்பிள்ளைக்கு பட்டர், "இதுவே தாரகமாகவிருக்கிற துவை கவியாதே" என்றருளிச்செய்தார்.

(5. பா. அரன் நாரணன் நாமம்.)

3. (கையதுவேல் நேமி) கிலாத்துக்குறிபகவர், பட்டரை, பரமபதத்திலும் ஈச்வரன் சதுர்ப்புஜனாயிருக்குமென்னுமிடத்துக்கு ப்ரமாணமுண்டோவென்று கேட்க; "தமஸ: பரமோ தாதா சங்கசக்ரகதாதர:" என்று பேசாநின்றதிறே என்றருளிச்செய்ய, அவர் கோபிக்க, ப்ரமாணகதி இருந்தபடி இது, ப்ரஸன்னாயித்தனையிறே" என்றருளிச்செய்தார்.

(24. பா. விரலோடு வாய்தோய்ந்த)

4. (விரவீத்யாதி) "வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு" என்றும் சொல்லாநின்றது; விரலோடு வாய்தோய்ந்த என்றும் சொல்லாநின்றது; இவை யெங்ஙனே சேரும்படி" என்று பின்னை திருநறையூரரையர் பட்டரைக்கேட்க; இவனுக்கு என்னத் திருப்பணிசெய்துவன்றோ, ஒருநாள் அங்ஙனுமாகிறது, ஒருநாள் இங்ஙனுமாகிறது" என்றருளிச்செய்தார்.

(42. பா, திருமகளும் மண்மகளும்)

5. (திருமகளித்யாதி) அனந்தாழ்வான் "திருமகட்கே தீர்ந்தவாறென்கொல்; மண்மகட்கே தீர்ந்தவாறென்கொல், ஆய்மகட்கே தீர்ந்தவாறென்கொல்" என்று பணிக்கும். (பாலேசதம் சிந்த) திருப்பாற்கடலின் குறுந்திவலை திருமுகத்திலே படும்படிக்கீடாகத் திருவனந்தாழ்வான் மேலேகிடந்த மாலோதவண்ணருடைய திருமகள்போல் வளர்த்த திருவுள்ளம், திருமகளும் மண்மகளும் ஆய்மகளும் சேர்ந்தால் திருமகட்கே தீர்ந்தவாறென்கொல்" என்றருளிச்செய்வர் பட்டர்.

(44. பா. தமருகந்ததெவ்வுருவம்.)

6. (தமருகந்தித்யாதி) எம்பெருமானார் மாதுகரத்துக்கெழுந்தருளாநிற்க, சில பிள்ளைகள் காலாலே கீறி, "உம்முடைய எம்பெருமான் திருமேனி" என்றுகாட்ட, பாத்ரத்தை வைத்து தெண்டனிட்டருளினார்.

7. "கோயிலிலே சிலபிள்ளைகள் விளையாடுகிறவர்கள் திருவீதியிலேயிருந்து பெருமாளும் நாய்ச்சிமாரும் பெரியதிருமண்டபமும் கற்பித்துப் பெரிய திருப்பாவாடையும் அமுது செய்வித்து, "எம்பெருமானார் ப்ரஸாதப்படும்" என்று மணலைக் கையாலே முகந்தெடுக்க, தற்காலத்திலே மாதுகரத்துக்கு எழுந்தருளுகிற உடையவர், அவ்விடத்திலே அது கேட்டருளித் தெண்டனிட்டு அவர்களெடுத்த ப்ரஸாதத்தைப் பாத்ரத்திலே யேற்றார்" ஜீயர் அருளிச்செய்தார்.

8. (எப்பேர் மற்றப்பேர்) எங்களாழ்வார்பாடே ஆயர்தேவு சென்று நாவற்பழம் வேண்ட, "நீயார்" என்று அவர்கேட்க, "ஜீயர்மகனான ஆயர்தேவு" என்ன, ஜீயரைக் கண்டு "உம்முடைய பிள்ளை எங்களைக் குடியிருக்க வொட்டுகிறிலன்" என்றார்.

(60. பா. சரணமறைபயந்த)

9. (மன்னுயிர்) ஆப்பான், ஜீயருக்கு, "ஜீயரே! இவ்வுலகு எம்பெருமானையல்லதறியாதிருந்ததோ" என்ன; "அதுக்குப் பொருளென்" என்ன; "உயர்ந்தோர் எம்பெருமானையல்லதறியார்" என்ன; இத்தை பட்டரைக்கேட்க, அதுக்கொரு குற்றமுண்டு, "ஓராழிசூழ்ந்த" என்று விசேஷிக்க வொண்ணாது" என்ன; இதுக்குப் பொருளேதென்ன; "ஜீயரே நான் சொல்லும் பொருளென்" என்ன; "உலகறியாத" என்ன; "அதுவேபொருள்" என்றார்; இத்தைப் பிள்ளையும் ஜீயருக்குரைக்கத் திருக்கலிகன்றிதாஸர் மறந்ததை உணர்த்தினரென்றருளிச்செய்தார்.

(மூன்றாந்திருவந்தாதி 26. பாட்டு. சிறந்தவென் சிந்தையும்.)

10. (தண்டுழாயார்) நிறைந்தசீர் நீள்கச்சியுள்ளும், வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப்பாடியுமுறைந்ததுவும், சிறந்தவென் சிந்தையும் செங்கணரவும் நீங்கடவார். உகந்த படுக்கையான திருவனந்தாழ்வானோபாதி யென்னுடைய நெஞ்சை அதிக்ரமியார். அன்றிக்கே, திருவனந்தாழ்வானையும் என்னுடைய நெஞ்சையும் தம்மதாக அபிமானித்திருப்பது; அல்லாதவற்றிலுறைந்த மாத்ரமேயென்றருளிச்செய்வர்.

(69. பா. வெற்பென்று வேங்கடம்பாடும்.)

11. (மற்பொன்றவித்யாதி) இப் ப்ரகரணத்தில் மேலும் மேலும் அந்யாபதேசமின்றிக்கேயிருக்க இப்பாட்டொன்றுமிப்படி கொள்ளுகிறதென்னென்று நிர்வஹிப்பர்கள்.

(91. பா. மண்ணுண்டும் பேய்ச்சி)

12. (வயிற்றினோடாற்றுமகன்) இதுக்குப் பிள்ளையுறங்காவில்லிதாஸர் வயிற்றை வண்ணானுக்கிட்டாலோவென்று பணித்தார்.

(திருவிருத்தவ்யாக்யானப்ரவேசம்)

13. ஆழ்வாரை முக்தரென்பர்கள் சிலர்; அருளாளப்பெருமாளெம்பெருமானார் ஸ்ரீபாதத்தை யாச்ரயித்தாரொருவர் முக்தப்ராயரென்பர்; அங்குள்ளாரொருவரை நீர்போய்ப் பிறவுமென்னப் பிறந்தாரென்பர்கள் சிலர்; வங்கிப்புரத்து நம்பி, எம்பெருமான்தான் இப்படி வந்து அவதரித்தானென்பர். இப்படி சொல்லுகைக்கு அடி ஆழ்வாருடைய ப்ரபாவமாயிற்று.

— திருவிருத்தம் —

(9. பா. திண்பூஞ்சுடர்நுதி.)

14. அவதாரிகை: எம்பெருமானார் திருமலைக்குப் போவதாகப் பிறந்தபடி கேட்டுப் பிள்ளையுறங்காவில்லிதாஸர் தம்மகத்தேபோய் மூடிக்கொண்டு கிடந்து "காண்கின்றனகளும்" என்கிறபாட்டை அநுஸந்தியாநிற்க, அங்குச் செய்கிற அளவென்னென்று பார்க்க

(36. பா. துழாநெடுஞ்சூழ்)

22. (இலங்கையித்யாதி இடித்தபிரானார் கொடுமைகளே) "ஒருத்திக்காகக் கடலையடைத்து லங்கையை ராமனென்றும் லக்ஷ்மணனென்றும் எழுத்துவெட்டின அம்புகளைப் புகவிட்டுக் குட்டிச்சுவரும் மட்டைத்தெங்குமாக்கி அழியடிபோகப்பண்ணின இந்த உபகாரகனுடைய இந்த நீர்மையெல்லாம் எங்கே குடிபோயிற்றதோ?" என்று எம்பாரருளிச்செய்வர். "இதுவுமழகியதொன்றுண்டாயிருக்கலாகாதென்று அஸூயையாலே அழித்தானத்தனைகாண், ஒருத்திக்காக உதவினவனல்லகாண்" என்று திருமலைநம்பி.

(38. பா. கடமாயினகள் கழித்து—அவதாரிகை.)

23. யோகிகள் யோகாப்யாஸம் பண்ணும்போது யோகம் ஸாத்மிக்கைக்காக லோகயாத்ரையிலே யொன்றுவர்கள். அதுபோலே யிவரும் பகவதநுபவம் ஸாத்மிக்கைக்காக லோகங்களில் பதார்த்தங்களிலே கண்வைத்தார். அவையும் பகவத்விஷயத்துக்கு ஸ்மாரகமாய் நலிகிறபடி. மயர்வற மதிநலம்பெற்றவராகையாலே நம்மை லோகயாத்திரையினின்றும் வேதயாத்ரையில் மூட்டுந்தனை யருமைபோரும் ஆழ்வார்களை வேதயாத்ரையிலே நின்றும் லோகயாத்ரையிலே மூட்டுகை. நம்மை ஸம்ஸாரத்திலுண்டான ருசிவாஸனையைத் தவிர்த்து பகவத்விஷயத்திலே யுண்டாக்குகைக்குள்ள வருமைபோரும் ஆழ்வார்கள் பகவத்விஷயத்தில் ருசிவாஸனையைத்தவிர்த்து ஸம்ஸாரத்திலேயதை யுண்டாக்குகைக்கு என்று எம்பாரருளிச்செய்தார்.

(43. பா. கண்ணுஞ்செந்தாமரை.)

24. (வண்ணமித்யாதி) "ப்ரஜை முலையிலே வாய்வைத்துத் தாய்முகத்தைப் பார்க்குமாபோலே" என்று பிள்ளைப் பிள்ளையாழ்வான்.

44. பா. (நேமுயர்கோலமும்.)

25. (பேரும்) திருமலைநம்பி அந்திமதசையிலே கணியனூர் சிறியாத்தானை "பிள்ளை தமக்குத் தஞ்சமாக நினைத்திருக்குந் திருநாமமென்? அத்தைச் சொல்லவேணும்" என்ன, "இவர்முன்னே நாமத்தைச் சொல்லுவது" என்று கூசியிராநிற்க, "தாசரதீ பேசாதிருக்குமவஸ்தையன்று காணிது" என்ன, நாராயணாதி நாமங்களுஞ் சொல்லிப்போருவர்; ஆகிலும் விரும்பியிருப்பது அழகியமணவாளப்பெருமாள் என்னும் திருநாமத்தை என்ன, 'பர்த்ருநாமத்தோபாதியாயிராநின்றது; ஆகிலும் பின்னை நினைத்திருந்தது போக்கித் தஞ்சமில்லையென்று 'அழகியமணவாளப்பெருமாளே சரணம்' என்று திருநாட்டுக்கு நடந்தார். கூரத்தாழ்வானோபாதியாகையாலே பட்டரைப் பிள்ளையென்பர்.

26. ஆச்சிமகன் அந்திமதசையிலே தன்னை யறியாதேகிடக்க, பட்டரெழுந்தருளிச் செவியிலேயூதினாற்போலே "அழகியமணவாளப் பெருமாளே சரணம்" என்ன, பூர்வவாஸனையாலே அறிவுகுடிபுகுந்து அத்திருநாமத்தைச் சொல்லித் திருநாட்டுக்கு நடந்தார்.

27. (உருவும்) ஆளவந்தார் மகனார் சொட்டை நம்பி அந்திமதசையிலே முதலிகளடையப்புக்கிருந்து நீர் நினைத்துக்கிடக்கிறதென்? என்ன, "ஸ்ரீவைகுண்டத்திலே சென்றால் நம்பெருமாளுடைய குளிர்ந்த முகம்போலே ஸ்ரீ வைகுண்டநாதன் முகம் குளிர்ந்திருந்ததில்லையாகில் முறித்துக்கொண்டிங்கேற ஓடிப்போருமித்தனை யென்று கிடக்கிறேன்" என்றார்.

28. பட்டர் பெருமாள் பாடேபுக்கிருக்க, பெருமாள் திருமஞ்சனத்துக்கேறியருளுகிறவர் பட்டரைக்கண்டு "உனக்குவேண்டுவதென்" என்று கேட்டருள, சேலையைக்கடுக்கி திருவரையையும் துடைப்பற்றையுமொருகால் காட்டியருளவேணும்" என்றார். பெருமாள்

"அஞ்சினையோ" என்று கேட்டருள * "நாயன்றே! பரமபதமென் சிறுமுறிப்படியழியும்; உம்முடைய குளிர்ந்த திருமுகமும் திருநாமத்தழும்பு மிழக்கிறேனாகக் கருதி அஞ்சாகின்றேன்" என்றார்.

(**51.** பா. மலைகொண்டு அவதாரிகை)

**29.** *சலைர் ஜகாம ஸாபேக்ஷ:** என்கிறத்தை "ஸாபேக்ஷ:" என்று திருத்தி; கீழ் வழியாலே பார்த்துப் போனரென்று பொருள் சொன்னபடியை பட்டர் கேட்டருளி "அதவேண்டாகாண், கிடந்தபாடந்தனக்கே பொருள் சொல்லலாங்காணென்று, இவ்வுபகிணங்களைக்கொண்டு நாம் பிள்ளையை முடிசூட்டிக் காணப்பெற்றிலோ மென்னுமபேக்ஷையோடே போனரென்கிறதுகாண்" என்றருளிச்செய்தார்.

(**52.** பா. அழைக்குங்கருங்கடல்)

**30.** (என்று வார்கின்றதே) அவளோடேயவன் கலந்தபோது அவயவியோடே கலந்தாற்போலே இவர்களிருக்கவும், இவர்களோடே கலந்தபோது தன்னுடைய ஸ்தனபாஹூத்ருஷ்டிகளோடே கலந்தாப்போலே அவள் நினைத்திருக்கவும், இப்படி இவர்களுடைய ஸ்வரூபமாய் அபரிச்சின்ன விஷயமாகையாலே எல்லாருங்கூடி அனுபவிக்கவேண்டியிருக்க இருவர்க்குப் பாத்தம் போராத க்ஷுத்ரவிஷயங்களிலுண்டாம் ஸாபத்ந்யமிவ் விஷயத்திலேயுண்டாகச் சொன்னுமது உபபன்னமாம்படி எங்ஙனே என்ன, இச்சோத்யத்துக்கு முன்புள்ள முதலிகள் "தானுமவனுமான போகத்துக்கு நான் ஸ்ரக்சந்தநாதிகளோபாதி வரவிருக்க என்னை யநாதரித்துப்போவதே என்றின்னுதாய் அழுகிறாள்" என்று பரிஹரித்தார்கள். இத்தை ஆளவந்தார் கேட்டருளி "வடிவிணையில்லா மலர்மகளை இங்கிருக்க நடுக்கும்படி கடலிலே கொடுபோவதே! படுக்கையாக நான்கிடக்கச்செய்தே, என்று பூமிப்பிராட்டி அழுகிறாள்காண்" என்றருளிச்செய்தார். இத்தை பட்டர் கேட்டருளி "இதெல்லாம் வேண்டாகாண், "அநுபபன்னமாயிருப்பதொரு அர்த்தத்தைச்சொல்லவே, "இதெங்ஙனே கூடும்படி" என்று தலைமகள் நெஞ்சிலேபடும், அவள் விசாரித்து நிர்ணயிக்குங்காட்டில் அவன் வந்து கொடுநிற்கும்" என்னும் விஸ்ரம்பத்தாலே சொன்னார்களாக வமையுங்காண்' என்றருளிச்செய்தார்.

(**53.** பா. வாராமினமுலையாளிவள்.)

**31.** ["மூவாமைக்காப்பதோர் மன்னுமருந்தறிவீரில்லையே"] இதுக்கு பட்டர், "நாட்டிலோராந்தராளிகளில்லையோ, என்கிறார்காண்" என்றருளிச்செய்தார். 'இவ்வார்த்தை கேட்டபோது பிள்ளை திருநறையூரரையருள்ளிட்டாரை ய நாலைந்து நாழிகை வேறொரு வார்த்தைக்கிடங்கொடாதே கொண்டாடி அவர்கள் பட்டது காணும்' என்று ஜீயருளிச் செய்வர்.

"வளர்த்ததனால் பயன்பெற்றேன்" என்கிற பாட்டை பட்டரருளிச்செய்யா நிற்கச்செய்தே பிள்ளைதிருநறையூரரையர் அதிலேயாளிச்செய்த சில வார்த்தைகளைக்கேட்டு "இதுக்குமுன்பு ஓராசார்யர் பக்கலிலுமிவ்வார்த்தை கேட்டறியோம்" என்று கொண்டாடி "பிள்ளாய்! பண்டுமிப்படி ச்லாகித்தாருண்டுகாணும், ஒரு திர்யக்கை வளர்த்துத் திருநாமங்களைக் கற்பித்துப் பின்னையது சொல்லக்கேட்டு அதின் காலிலே விழுந்தாருமுண்டுகாணும்" என்றருளிச்செய்தார். "நீருமக்கு வேண்டின கிளியிலே ஹேதுக்களை வையும், உம்மை யநுபவிக்கிறவித இழவாதொழியுமத்தனையே வேண்டுவது" என்றாராம்.

உடையார் ஸுப்ரஹ்மண்ய பட்டர் எம்பெருமானாரெழுந்தருளியிருக்கிற காலத்திலே இங்கேவந்து திருப்புன்னைக்கீழே பெருமாளை ஸேவித்திருக்க, எம்பெருமானாரைச் சிலர் வந்தனுவர்த்திக்கிறபடியைக்கண்டு "ஜீயரே! நான்கேட்கவேண்டியிருக்கிறதொரு வார்த்தையுண்டு" என்ன, அதேது என்ன, "ஸர்வேச்வரன் திருமுன்பே நம்மைச்சிலர் தெண்டனிடாநின்றார்கள், நாமும், அதுவேண்டா, என்கிறிலோம், இதுக்கடியேது" என்ன, "இதுதான் கேட்கவேண்டுவதொரு வார்த்தையாகிலும் நீர்கேட்குமதென்?" என்றருளிச்செய்தார். "எனக்கு வாசியென்" என்ன, "நீர் ராஜஸேவை பண்ணித்திரிந்தவரன்றோ; ராஜாவின் பக்கலிலேயொருவன் கார்யங்கொள்ளவந்தால், அவனுடைய பாதுகைகளையெடுத்துத் தலையிலே வைத்துக்கொள்ளாநின்றால் அவை தன்னைத் தலையிலே வைக்கவேண்டா, என்னுமோ? அவன் தானவற்றைக் கொண்டாடுகிறானோ? அவற்றைக் கொண்டாடுகிறானாகில் அவைதான் கார்யஞ் செய்யவேணுமிறே, அனபின்பு இத்தால் ப்ரீதனாவான் ராஜாவேயன்றோ" என்றருளிச்செய்தார்.

(56. பா. வியலிடமுண்டபிரானார்)

32. எம்பெருமானாரெழுந்தருளியிருக்கச்செய்தே ஸ்ரீபாதத்திலே ஸேவித்திருக்கிறவர்கள் "நமக்குத் தஞ்சமாக நினைத்திருக்க வடுப்பதென்" என்ன, வங்கிப்புரத்துநம்பியிருந்தவர் "ஸுடோர்யமல்பமதி:", என்கிற க்ஷத்ரபந்துவினுடைய வாக்யமன்றோ" என்ன, அதொன்றுதுகாண், "ப்ரணதே" என்றொன்றுண்டு; அதிலேயொரு ஸர்வஜ்ஞனந்ய நிர்மமனாய்விழவேணுமிறே; நந்தலையிலேயேதேனுமோரம்சமொதுங்கில் அதுசெய்து தலைக்கட்டுகையிலுள்ள வருமையாலே அது இழவோடே தலைக்கட்டும்படியிருக்குங்காண்.

இத்தலையாலே யேதேனுமோரம்சம் வருவதுண்டாகில் அது அப்ரதிஷேதத்திலே புகுமித்தனையல்லது உபாயஸஹகாரமாகாது. "நீயுபாயமாகவேணும்", என்கிற ஸ்வீகாரம் அவச்யாபேக்ஷிதமாயிருக்கச்செய்தேயும் அத்தலையிலே உபாயமாம்படியிறே இருப்பது. இவன் பக்கலிலே பரமபக்தி பர்யந்தமாக நின்றாலும் அது ஸ்வரூபப்ரயுக்தமான ருசியிலே அந்வயிக்குமித்தனைபோக்கி ஸ்வதந்த்ரமாக நின்று பலப்ரதமாகமாட்டாதேயிறே யிருப்பது; "ஆனால் பின்னை நினைத்திருக்க வடுப்பதென்" என்ன, "காளியனுடைய வார்த்தையை நினைத்திருக்கவடுக்கும்" என்றருளிச்செய்தருளினர்.

(60. பா. முலையோ முழுமுற்றும்.)

33. (கடலித்யாதி) இவ்விடத்தை பட்டருளிச்செய்யாநிற்க, "அல்லாத அவயவங்களினுடைய நிரம்பாமையைச் சொல்லிவைத்து இதினுடைய பெருமையைச் சொன்னால் விரூபமாகாதோ?" என்று ஜீயர் கேட்க, "இதிலும் சிறுமையேகாணும் சொல்லுகிறது. இங்ஙனே சொல்லலாவதுதானுமின்று, நானே இதுதானுஞ் சொல்லப்போகாது" என்றருளிச்செய்தார்.

(62. பா. இறையோவிரக்கினும்)

34. (முகில்வண்ணனே) இத்தை எம்பாரருளிச்செய்கிறபோது இவனைச்சொல்லுகிறவரைப்பார்த்து "இவ்வளவில் முகங்காட்டாதே செங்கற் சீரைகட்டவிருக்கிறவர் முதலிகளாயிருப்பர்; தலையிலே பிரம்புகள் விழினும், 'முகில்வண்ணனே' என்னீர்" என்றருளிச்செய்தார்.

((75. பா. உலாகின்றகெண்டை.)

35. பின்னை திருநறையூரரையர், "அடியார் நிலாகின்ற வைகுந்தமோ? அன்றிக்கே அவனதான வையமோ" என்று பணிப்பாராம்.

(80. பா. சீரரசாண்டு.)

36. (எம்மைநீத்துவஞ்சித்தோரரசே) "உபயவிபூதிக்கும் தனித்தனியே கடவனனவோ பரதி, என்னையகற்றி முடிக்கைக்கும் தனிமுடிசூடியிருக்கிறவனே! என்று பிள்ளான். "என்னையகற்றியத் செய்கிறபோது 'பிரியேன்' என்று வைத்துப்பிரிந்து, 'இஸ்வபாவத் துக்குப் புறம்பென்னேடொப்பாரார்?' என்றிருக்கிறவனுயிற்று. 'என்னுல்லது செல்வர் தாரைப் பொகடவல்லாரார்? என்னேபாதியில்லை" என்றிருக்கும் தனிமுடிசூடியிருக்கிறவ னுயிற்று என்று பட்டர்.

(82. பா. எரிகோள் செந்நாயிறு—அவதாரிகை.)

37. ஜீயர் "எனக்கு இப்பாட்டுச்சொல்லவபிமதமாயிருக்கும்" என்றருளிச்செய் வர். உருவெளிப்பாட்டிலே ஸர்வேச்வரனுடைய திருக்கண்கள் பாதகமாகிறபடியைச் சொல்லுகிறதிறே. இவருடைய வாற்றுமையுண்டாகிலிறே இப்பாசுரஞ்சொன்னுல் நமக்கு ஸாத்மிப்பது.

(33. பா. விளரிக்குரலன்றில் அவதாரிகை.)

38. பட்டர் இவ்விடத்தை யருளிச்செய்யாநிற்க, நஞ்ஜீயர் ஸ்ரீராமாயணத்திலிவ் விடத்துக்குப் போலியாகச் சொல்லலாமிடமுண்டோ என்று கேட்க இளையபெருமாள் காட் டிலே கொண்டுபோய் பிராட்டியை விட்டுப்போந்தவனந்தரம் அவனுடைய ஆர்த்தத்வனி கேட்ட ஸ்ரீவால்மீகிபகவானுக்குத் திருத்தாயார்படியுண்டாகச் சொல்லலாம் என்றருளிச் செய்தார்.

(முன்றில் பெண்ணை) முன்றிலென்று முற்றத்துக்கும் வாசலுக்கும்பேர். முற்றத் தில் பனைகடலாமோவென்றிவ்விடம் நிர்வஹியாநிற்கச்செய்தே வங்கிப்புரத்து நம்பியைச் சிலர்கேட்க, அதுவோ! இவள் கார்யம் தளிருமுறியுமாய்ச் செல்லுகிறது என்று பணித்தா ராம்.

(85. பா. மாணிக்கங்கொண்டு)

39. (அடியாரி) ஆழ்வான் திருக்கோட்டியூர் நம்பிபாடுநின்றும் வந்தவனந்தரத் திலே பிள்ளைப்பிள்ளாய்! என்னுள்ளான் என்னவேண்டும்ஸ்த்தானே ஆழ்வார் அடியேனுள் ளான் என்றபடி கண்டாயே என்று பணித்தார்.

(94. பா. மைப்படிமேனியும்)

40 (மைப்படிமேனியும்) பட்டரொருநாளிவ்விடத்தை யருளிச் செய்யாநிற்க, பிள்ளை விழுப்பரையரும் ஆப்பான் திருவழுந்தூரரையருமிருந்தார்களாய் அநுஸந்தித்தார் நெஞ்சிலே பிருள்படியும்படியான திருமேனியும் என்றருளிச்செய்ய நஞ்ஜீயர் *இன்னுரென் றறியேன்* என்னப்பண்ணுகைக்காகாதே என்றருளிச்செய்தருள "இவ்வார்த்தை சொன்ன ரார்? என்ன; ஜீயர் என்றவர்கள் சொல்ல நூற்றுப்பதின்காதத்துக்கருகே பிறந்து இவ் விளவும்வந்து இன்று மேக்ஷித்தையுபகரிப்பதே! என்று கொண்டாடியருளினராம்.

(95. பா. யாதானுமோராக்கை—அவதாரிகை)

41. இவ்விடத்திலே ஜீயர் குறியாகவருளிச்செய்வதொரு வார்த்தையுண்டு. திருக் கோட்டியூரிலே பட்டரெழுந்தருளியிருக்கச்செய்தே அங்கே ராமாநுஜதாஸரென்னுெரு ஸ்ரீ வைஷ்ணவர் அடியேனுக்குத் திருவிருத்த மருளிச்செய்யவேணும் என்ன, பெருமாளைப்பிரிந்த சோகத்தாலே நாஞ்சென்றுக்கும் க்ஷமனல்ல; ஜீயரே நீருளிச்செய்யும் என்ன ஜீயருமருளிச் செய்து கொடுபோகாநிற்கச்செய்தே வளவன் பல்லவதரையரென்று திருக்கோட்டியூர்நம்பி

ஸ்ரீபாதத்தையுடையாரொருவர் அநுஸந்தித்துக் கொடுபோந்தாராய் அவரிப்பாட்டளவிலே வந்தவாறே கண்ணுங்கண்ணீருமாய்ப் புளகிதகாத்ரராயிருக்க இத்தைக்கண்டு பாடியில் வார்த்தைகள் சொல்லுவது, இனிப்ரஸங்கித்தமாத்ரத்திலே வித்தரானீர்! என்ன; நம்பியெனக்கு ஹிதமருளிச்செய்தவநந்தரத்திலே எம்பெருமான் திருமுன்பே யிப்பாட்டை நாள்தோறும் விண்ணப்பஞ்செய் என்றருளிச்செய்தார். அத்தை யிப்போது ஸ்மரித்தேன் என்ன அவரிதிலேதேனு மருளிச்செய்யும் வார்த்தை நினைத்திருப்பதுண்டோ என்ன, அதெனக்குப்போகாது, இப்பாசுரமாத்ரத்தை நினைத்திருப்பேன் என்றாராம், நம்பியாதரித்த பாட்டாகாதே யென்று ஐந்தாறுநாழிகைபோது இத்தையே கொண்டாடியருளிச்செய்தார்.

(98. பா. துஞ்சாமுனிவரும்)

42. (இமையோர்தமக்கும் செவ்வேநெஞ்சால் நினைப்பரிதால்) அரையனுக்குப் போகிறபாலை யோரிடையன் களவுகண்டான் என்று கட்டியடியாநிற்கப் பிள்ளையுறங்காவில்லிதாஸர் கண்டு பரவசராயிருந்து இத்தால் வந்ததுக்கெல்லாம் நான்கடவன் என்று விடுவித்துக்கொண்டாராம்.

(99. பா. ஈனச்சோல்—அவதாரிகை)

43. ஆழ்வான் திருவாய்மொழி நிர்வஹிக்கப்புக்கால் பிள்ளையுறங்காவில்லிதாஸர் கண்ணுங்கண்ணீருமாய் அத்தையித்தைப்ரஸங்கித்துச் சிதிலராவர். அத்தைக்கண்டு கூரத்தாழ்வானும் மஹாபாஷ்யங்கற்று சதுஸ்ரமாக வொன்றை நிர்வஹிக்கிற வெங்களைப்போலன்றிக்கே பகவத்குணப்ரஸங்கத்திலே சிதிலராம்படி பிறந்த உம்முடைய ஜந்மமொரு ஜந்மமே என்றானும். ஆழ்வான்தான் வீராணத்திலேயொரு பெண்பிள்ளை புக்காளாய் மடியிலே வைத்துக்கொண்டிருந்து *கள்வன் கொல்யானறியேன் கரியானொருகாளைவந்து* என்று சந்தைசொல்லுவியாநிற்க மேற்சந்தையிடமாட்டாதே மோஹித்து விழுந்தான். இப்படியிருக்கிறவனிறே தன்னை வன்னெஞ்சனாக்கி வார்த்தை சொன்னான். ஸ்வாமிகள் திருமழிசைதாஸராய் நஞ்சீயரை பட்டர் ஸ்ரீபாதத்திலாச்ரயிப்பித்தாராய் அர்த்தாத் அவரும் தாமுமாகப் பகலிருக்கையிலே போயிருந்து அவரும் தாமுமாகத் திருவாய்மொழியோதாநிற்க ஆண்டான் பின்னிட்டுச் சென்றானாய் அவனைக்கண்டு நஞ்சீயர் எழுந்திருக்கப்புக, வேண்டா என்று கைகவித்துக்கொடுவந்து நீங்கள் கோயிற்கூழைத்தனமடிக்கிறபடி யிதுவோதான் என்ன; திருவாய்மொழியோதிற்று ஸ்ரீபாதத்திலேயாயிற்று என்றாராய். பகலெல்லாம் பாஷ்யத்திலே அந்யபரராயிருப்பர்; இரவமுதுசெய்து பள்ளிக்கட்டிலிலேயேறியருளினால் சந்தைசொல்லவாராயோ என்றழைப்பர். மூந்துற சந்தைசொன்னால் புளகிதகாத்ரராவர்; இரண்டாஞ்சந்தைக்குச் சிதிலராவரென்று; எங்கேனுமொருகால் புக்காராகில் நாலிரண்டு ஒலியல்கொண்டு பரிமாறவேண்டும்படியாயிற்று கண்ணீர் வெள்ளமிடும்படி. பெருமாள் அமுதுசெய்யும்போது இன்னதனை கறியமுதும் நெய்யமுதுமென்று கடக்கிட்டு அவைதன்னை யமுது செய்வதற்கு முன்னேயும் எனக்குக்காட்டி அமுதுசெய்தாலு மெனக்குக்காட்டிக்கொடு போங்கோள் என்றாராய் அவர்களும் திருவுள்ளத்திலோடுகிறதறியாதே அப்படிசெய்து கொடுபோந்தார்களாய் இப்படியாறுமாஸம் சென்றபின்பு ஒருநாள் பார்த்து இத்தையொருநாள் குறியழித்திட்டுவைத்தாலாகாதோ என்றருளிச்செய்தாராம். கிடாம்பியாச்சான் ஆழ்வானோடே திருவாய்மொழி கேட்கிறநாளிலே ஒருநாள் ஸ்ரீபாதத்திலே புகும்போதிலே தாழ்த்துப்புக என் நீ வைகினாய்! என்ன, ஆழ்வான்பாடே திருவாய்மொழிகேளாநின்றேன் என்றானாய் இன்றென்ன திருவாய்மொழி நிர்வஹித்தான் என்று கேட்டருள, பிறந்தவாறு என்றானாய் அதில் சொன்னவார்த்தைகளென் என்ன; ஒரு வார்த்தையுமில்லை என்றானாய், நீ கேட்டபடியென் அவன் சொன்னபடியென் என்ன, நிர்வஹிப்பதாக ஆரம்பித்து இயல்சொல்லி அனந்தரம் ஆழ்வாருடைய பாவச்

யத்தை யநுஸந்தித்து நெடும்போது கண்ணுங்கண்ணீருமாயிருந்து இவ்வாழ்வாருமொருவரே! இவர்க்கோடுகிற ஸாவஸ்த்தி நாமிருந்து பாசுரமிடுகையாவதென்!; என்று இற்றைக்கு விடலாகாதோ என்று விட்டான் என்ன; என்னபரமசேதனனோ என்றருளிச்செய்தாராம்.

(பாசுரவ்யாக்யானம்)

44. (அல்லாவில்லை) ஒருவிசை திருக்கோட்டியூர் நம்பி திருநாளுக்கு நடந்துவிட்டு இவ்வர்த்தத்தை யருளிச்செய்வதாக ஒரு ஏகாந்த ஸ்தலத்தே எம்பெருமானாரையுங் கொண்டு புக்காராய் திருப்பணிசெய்வானொருத்தனங்கே யுறங்கிக் குறட்டைவிடாநிற்க அவனைக்கண்டு அகர்த்தப்பட்டோம் என்று அவ்விசைக்குத்தவிர்ந்து மற்றைவிசையிலே யித்தை நம்பியருளிச் செய்யக் கேட்டருளி ஆழ்வானகத்திலே அமுதுசெய்திருக்கிறவளவிலே உச்சிவெய்யிலிலே வந்து புகுந்து நம்பி இவ்வர்த்தத்தை யொருவருக்குஞ்சொல்லாதேகொள் என்றருளிச் செய்தார்; உனக்கிது சொல்லாதிருக்கமாட்டேனிறே என்று ஸஹகாரிநைரபேக்ஷ்யத்தை யருளிச்செய்தாரிறே.

---

[இனி, திருவிருத்தத்திற்கு நம்பிள்ளையீட்டிலுள்ள ஐதிஹ்யநிர்வாஹங்கள்—]

(ப்ரவேசம்) ஆழ்வார் முக்தரென்பர் சிலர். அருளாளப்பெருமாளெம்பெருமானார் ஸ்ரீபாதத்தையாச்ரயித்தாரொருத்தர் முக்தப்ராயரென்பர்; ஆங்குள்ளாரிலேயொருவர் நீர் போய்ப் பிறவும் என்னப் பிறந்தாரென்பர்கள் சிலர். வங்கிப்புரத்து நம்பி எம்பெருமான் தானே வந்தவதரித்தானென்பர். இப்படி சொல்லுகைக்கடி ஆழ்வாருடைய ப்ரபாவமிருக்கும்படி.

(1. பா. பொய்ந்நின்றஞானமும்)

1. (பிறந்தாய்) இதுக்குமுன்பு பிறந்தபிறவிகள் கார்யகரமாகாதே உடுத்த வேஷ்டியோடே போனவத்தனையன்றே? அது உனக்கு இன்று கலக்கட்டவன்றே புகுகிறதென்று பட்டருளிச்செய்தாரென்று ஸ்ரீவத்ஸாங்கதாஸர் சொன்னாரென்றருளிச்செய்தார்.

(3. பா. குழற்கோவலர்)

2. கீழ்த் தாம் பகவத்விச்லேஷத்தாலே கண்ணுங் கண்ணநீருமாயிருக்கிறவிருப்பு வைஷ்ணவர்களுக்கினிதாயிருக்கிறபடியைக் கண்டு அவ்வழியாலே தம்தசையைத் தாமேயநுபவித்தாரென்றபடி; இப்படி பகவத் விஷயத்திலே யவகாஹித்திருக்கிற நமக்குக் கேவலம் போகாநுஸந்தாநமாத்ரமேயாய் விடுகிறதோ? பார்ச்வவிச்லேஷமும் பெற்றுவிடுகிறதோ? என்று திருமலைநம்பி பணிப்பரென்று பிள்ளை திருநறையூரரையரருளிச்செய்வர். ஆங்கனன்றிக்கே, ப்ரதமதர்சனத்திலே அநாதிகாலம் வாஸனை பண்ணிப்போந்த ப்ராக்ருதங்களை விடுவிக்கவேணுமென்று கால்கட்டப்பண்ணின விஷயம் ஸாக்ஷாத்கரித்தவன்று ஸாத்மிக்குமோ ஸாத்மியாதோ என்றுமென்று பட்டருளிச்செய்வரென்று ஜீயர். கீழிரண்டு பாட்டாலும் பகவச்சேஷத்வத்தளவிலே நின்றாராய் இதிலந்த சேஷத்வத்தினெல்லை நிலமான பாகவதசேஷத்வாநுஸந்தானத்தாலே இனியராகிறாரென்று பிள்ளையருளிச் செய்யும்படி.

(8. பா. காண்கின்றனகளும்)

3 *பண்டிவரைக்கண்டறிவதெவ்வூரில் என்னக்கடவதிறே ஸ்வாபாவிக சேஷத்வத்தாலும் முகத்தில் தண்ணளியாலும். ப்ரதமதர்சனத்திலே முன்பே இவரைக்கண்டோம் போலேயிராநின்றதே என்னப்பண்ணும். நெடுநாள் ஸம்ச்லேஷம் வ்ருத்தமானால் பின்னை

யொருநாள் கண்டால் அப்படியவரைக் கண்டறியோமே என்னும்படியாயிருக்கும். இரண்டிடத்திலும் சப்தமொன்றாயிருக்க இது எங்ஙனே விளங்கும்படி என்று நான் ஜீயரைக் கேட்க "என்றே பயில்கினருளால்" என்று நின்றது கண்டீரே என்றருளிச்செய்தாரென்று பிள்ளையருளிச்செய்வர்.

(கச்சியில் கவாபனையில்) ஒருநாளெம்பெருமானார் முதலிகளெல்லாரோடுங்கூட எழுந்தருளியிருக்கச்செய்தே திருக்கச்சிநம்பி செய்கிறதென்னென்றாராய்ந்து வருவாரில்லையோ என்னாக்கடுக ஒருவரும் நான் போகிறேனென்று எழுந்திருந்தாரில்லை; பிற்றைநாள் விடிவோரே பெரியநம்பி வந்து தாமழைக்கிறபடியே எம்பெருமானாரை யெழுத்து நான் பெருமாள் கோயிலிலே பெருமாளைத் திருவடிதொழுது வாராநின்றேன் என்ன; நிஷேதிக்கலாம்படியன்றே ப்ரபாவமிருப்பது; எழுந்தருளலாகாதோ என்ன; அங்கேபோய் அவரிருக்கிறபடியறிந்துபோரா, திருநாளணித்தாயிருந்தது போகிறதென் என்ன, நான் வந்தகார்யந் தலைக்கட்டிற்று; இனித்திருநாளுக்குநிற்கவொண்ணாது என்ன; இப்படியே போய் வரவல்லாரில்லையோ என்றவிடத்தில் நான் என்று எழுந்திருந்தாரில்லை அத்தாலே இவர்க்கிதுவோ கருத்தென்று போந்தேன்; அது தலைக்கட்டிற்று. இனிப் போகவமையும் என்றாராம்.

(9. பா. திண்பூஞ்சுடர்)

4. (ஸ்வாபதேசம்) ஆழ்வாருடைய ஸ்ரீவைஷ்ணவத்வத்தைக்கண்ட வைஷ்ணவர்கள் பக்கல் பரிவாலே பிரியிற்செய்வதென்னென்று அதிசங்கையைப்பண்ண இவ்வதிசங்கை தானே சமிக்கிறதென்று ஆறியிருக்கவொண்ணாதே; பரிஹரித்தல்லது நிற்கவொண்ணாததசாவிபாகத்தைச் சொல்லுகிறது. பண்டெழுந்தருளியிருக்கிற நாளிலே எம்பெருமானார் இங்கே சிலவெறுப்புண்டாய்த் திருமலைக்கெழுந்தருளுவதாக நினைத்தருளி ஒரு ஸ்ரீவைஷ்ணவனுக்குச் சில நெல்லுக் கொடுக்கைக்குப் பிள்ளையுறங்காவில்லிதாஸர் பாடேறத் திருக்கையிற் சாத்தின திருப்பவித்ரத்தை வாங்கிக் கொடுத்தருள, ஸ்ரீவைஷ்ணவனுமங்கே செல்ல பிள்ளை *காண்கின்றனகளும் கேட்கின்றனகளும்* என்கிறபாட்டை யநுஸந்தித்துக்கண்ணுங் கண்ணநீருமாயிருக்க; பிள்ளைக்கு வந்தகார்ய மறிவிக்கவல்லாரில்லாமையாலே ஸ்ரீபாததேறவர்; என்தான் கடுகவந்தாய்? நெல் பெற்றிலையோ என்ன; அறிவிக்க வளவாயிராதே காண்கின்றனகளுங் கேட்கின்றனகளும் என்கிற இத்தைச்சொல்லி மூடிக்கொண்டு கிடந்தார் என்ன* வண்பூ மணிவல்லி யாரே பிரிபவர்தாம் என்னமாட்டிற்றிலையோ என்றருளிச்செய்தாராம்.

(10 பா. மாயோன்)

5. ஸ்வாபதேசப் — திருக்கோட்டியூர் நம்பி கோயிலுக்கு நடந்து மீண்டெழுந்தருளும் விசைதோறும் மாராச்சிப்புரத்தளவும் வழிவிட்டுப் பின்னையும் மீளுவது அதிலொருவிசை போகாநிற்க, ஜலகார்யத்துக்கெழுந்தருளி நிற்கச்செய்தே எனக்குத் தஞ்சமாக நினைத்திருக்கலாவதொன்றருளிச்செய்யவேணும் என்ன; ஆளவந்தார் ஸ்நானார்த்தமாக இழிந்து அகமர்ஷணம் பண்ணிக்கிடக்கும்போது ஆமைமலையைக்கவிழ்த்தாப்போலேயிருக்கிற முதுகுபுறத்தை அவருடைய உக்தியும் நோக்கும் யாறினபின்பு எனக்குத்தஞ்சமாக நினைத்திருப்பன்; நீருமத்தையே தஞ்சமாக நினைத்திரும் என்றருளிச் செய்தாராம்.

(11. பா. அரியனயாமின்று)

6 (அரியன) இப்பெரிய திருநாளிலே இதொரு திருவேகாதசி எங்கே தேடி எடுத்திகோள் என்று பட்டருளிச்செய்தார்.

(14. பா. ஈர்வனவேலும்)

7. (விசும்பூர்தேர்வன) இதுக்கிரண்டுபடியாக அருளிச்செய்வர்; லீலாவிபூதியாகக் கொண்டு ஆவதழிவதாகிற விபூதிபோலன்றிக்கே [illegible] விபூதியாயிருக்கிற

நித்யவிபூதியிலுள்ளாராலே தேடப்படுவனவாயுள்ளன. பகவதனுபவமொழிய வேறொன்று நெஞ்சிற்படாதபடி யிருக்கக்கடவவர்களும் வந்தாதரியாநிற்பர்களாயிற்று இவனை, அன்றிக்கே பரமபதமென்றொரு விபூதியில் காமனுஜ்ஜை நடையாடாதே கிடக்கிறதென்னென்று அத்தை இங்கே நடத்தப்பார்ப்பனவாயுள்ளன; பகவத்வ்யதிரிக்தங்களைப் பற்றி வரக்கடவ காமத்தையிறே நிஷேதித்தது; இதுக்கநுகுணவிஷயமானால் வருங்காபமுண்டே.

இதுக்கு ஸ்வாபதேசப்—கண்ணென்கிற இடமெங்கும் ஞானமாக நிர்வஹிப்பராப் பிள்ளைதிருநறையூரரையர்.

(**15.** பா. கயலோநுமகண்கள்—ஸ்வாபதேசம்)

8. [தத்பக்தைர்வா ஸமாகம:] மேல்நாட்டிலே கேசவதீக்ஷிதருடைய அகத்திலே எழுந்தருளியிருந்தருளிச்செய்ததாகப் பிள்ளையருளிச்செய்யும்படி; அந்த உத்தேச்யமானது தானே ஸித்திக்கிலும் ஸித்திக்குங்காணென்று. இந்த (வா) விகல்பத்திலன்றிக்கே பக்ஷவ்யாவ்ருத்த்யர்த்தமாக இருக்கிறது. இவ்வளவு வந்தால்தான் பூர்ணமாவது; இவ்வளவுவாராதவன்று கீழ்ச்சொன்ன பக்திதானும் அஸப்யமிறே.

(**16**- பா. பலபலவூழிகள்.)

9. ஸ்ரீகுருகைப்பெருமாளோடு நின்றானாகில் இவனுக்குக் காலம் நெடுகுவானேன்? என்று பிள்ளைகேட்டருள; ஸ்ம்ருதிக்கு உத்போசகருண்டானால் காலம் நெடுகுமத்தனையிறே என்று ஜீயரருளிச்செய்தார்.

(**22.** பா. கோம்பார்தழைகை)

10. (சிறுநாணெறிவிலம்) இப்போது கையில் வில் இல்லாமையையன்றிக்கே முன்பு விற்பிடித்த தழும்புகூடக் கண்டிலோமீ! இவர்கள்தான் வீரபத்நிகளாகையாலே கையைக் கண்டபோதே அறிவர்களாயிற்று. அன்றியே சிறுநாணைய்யப்படுவான் வில்லையுடையீரல்லீரென்றும் நிர்வஹிப்பர்கள்.

(**23.** பா. புனமோபுனத்தயலே)

11. (புனத்தயலே வழிபோகு மருவினையேன்) ஆப்பான் திருவழுந்தூரரையர் மச்சிலே பிள்ளை திருநறையூரரையரிப்பாட்டையருளிச்செய்யாநிற்க சீலப்ரசுரமாய் உகந்தருளின நிலங்களெங்குமுண்டாயிருக்கத் திருப்புளிக்கீழிட்ட வழிபோய்க் கெட்டேன் என்கிறானென்று.

(**25.** பா. எங்கோல்வளைமுதலா.)

பண்டுய்யக்கொண்டார் பக்கலிலே பலரும் வ்யவஹாரம் கேட்கச் செல்லுவர்களாய் அதிலே ஆளாளப்பெருமாளென்பானொருவனும் வேறேயொருதானும் வழக்குக்கேட்கச்செல்ல அவரைக்கண்டு தாமிருந்தவிடத்தை யவருக்குக்கொடுத்துக் கடக்க நின்றாராம். அவர்தாம் தமக்குள்ளவை யறிந்திருப்பரிறே. எல்லாரோபாதி யிவரும் அறிந்திருப்பரென்றிருப்பரிறே; அவரிதறியாமல் பின்னையறிந்திலையோ வென்ன; என்னாலேயும்மை யறியப்போமோ *ஏஷகர்த்தா ந க்ரியதே காரணஞ் சாத்ர பௌருஷம், யோஹ்யேநம் புருஷம் வேத தேவா அபி ந தம் விது:* பிரானே உம்மை யறியாமைக்கு யோக்யதையுடையார் தேவர்களன்றோவென்றாராம்.

பண்டு ஸ்ரீபக்தப்ரியரென்பாரொருவர் இவருடைய பகவத் விரஹத்தாலே வந்த ஆற்றாமையை யநுஸந்தித்து ஆழ்வீர் என்பட்டீரென்பட்டீர் என்று திரிவாராம்.

(**33.** பா. அருளார் திருச்சக்கரம் அவதாரிகை.)

12. பட்டர் விவாஹப்ராப்தரான ஸமயத்திலே ஆண்டாள் ஆழ்வானுக்கு பிள்ளைகள் விவாஹப்ராப்தராயிருக்க இதுக்கொன்று விசாரியாதேயிருக்கிறதென்னென்ன; பகவத்

குடும்பத்துக்கு என்னைக் கரையச்சொல்லுகிறாயோ; வேணுமாகில் கோயிலிலே பெருமாள் பாடே வரக்காட்டுகிறாய் என்ன. பிற்றைநாள் ஆழ்வான் வாசியாகிற்கச் செய்தே இவர்களைப் போகவிட்டான்; பெருமாள் ஆழ்வானைப்பார்த்து ஒன்று சொல்லுவாய்போலேயிருந்தாயீ என்ன; இவர்கள் விவாஹப்ராப்தரென்னாநின்றார்கள் என்ன; பின்பு இரண்டு மூன்று நாளைக்குள்ளே மன்னியைக்கொடுவந்து நீர் வார்த்தார்கள்.

(பாசுரவ்யாக்யானம்)

13. தனித்தனியே நூற்றுவரையும் சுழற்றி பெறியவல்ல பார்த்தாக்களுமிருக்க நாஸ்தனான க்ருஷ்ணனை ஸ்மரிப்பானேன்? என்றானவந்தாரைக்கேட்க; அதிக்தோமே பண்டே யொரு சுருசுருப்புண்டுபோலே காணும் கேட்டுவைப்பது என்றருளிச்செய்தாராம். அதாவதென்னென்னில் *ஸ்மர்த்தவ்யோ பகவாந் ஹரி:* என்று ஆரேனும் சொல்லிவைத்தாருண்டு போலேகாணும்.

(**34.** பா. சிதைக்கின்றதாழியேன்று)

14. (தன்சீரடியாலுதைக்கின்ற) பட்டரிவ்விடமருளிச்செய்யாநிற்க விழுப்பரையர் இவளிம்மணலையுதைக்கிறது அவனறிந்தானாகில் அவளிதினுள்ளே புகுந்து வ்யாபித்து நில்லானோ என்ன? அவன் புகுந்து வ்யாபிக்கவேணுமோ; இவள் காற்பட்ட மணல் பாதத்வமாகாதோ என்றருளிச்செய்தாராம்.

(**36.** பா. தூழாநெடுஞ்சூழ்)

15. (இலங்கையித்யாதி) அபிமதவிஷயத்துக்காக அவ்வரணையழித்து உள்ளேபுக்கு உபகரித்தவரிப்போது பிறர்கோவு தமக்குப் போதுபோக்காக புத்திபண்ணியிருக்கிறாராகாதே என்று எம்பாரருளிச்செய்யும்படி. அங்ஙனன்றிக்கே வரபலத்தாலே ஒருவராலழிக்க வொண்ணாத அரணையுடைத்தான அரணையழித்தத ஒருத்திக்காகவென்றிருந்தோம்; அதங்ஙனன்றியே இங்ஙனே கட்டளைப்பட்டு தர்சநீயமாயிருக்கிறதென்! என்னும் பொருமையாலே அழித்தாரித்தனை; அப்படி நம்முடைய ஸ்த்ரீத்வத்தால்வந்த அரணையழிக்கைக்காகவல்லது நம்மோடே ஸ்நேஹமுண்டாயல்ல என்று திருமலைநம்பிவார்த்தை.

(**38.** பா. கடமாயினகள்கழித்து அவதாரிகை)

16. குருகைகாவலப்பனை ஜகதீச்வரர்களுக்கு ஸம்பந்தமிருக்கும்படியென் என்று கேட்க; இஜ்ஜகத்துக்கு மிவ்வீச்வரனுக்கும் நீயே கேட்கிறது? என்றான்; இத்தால் *சரீரம் யதவாப்நோதி யச்சாப்யுத்க்ராமதீச்வர:* என்று இக்க்ரியாதிகளோடே கூடி உபசயாத்மகமாயிருந்துள்ள இச்சரீரமாகிற விஜ்ஜகத்துக்கு ஜீவாத்மாவை ஈச்வரனாகச் சொல்லாநின்றதிறே; இச்சரீரத்துக்கும் ஈச்வரனானவாத்மாவுக்குமுண்டான ஸம்பந்தம் யாதொன்று அப்படி இச்சரீரசரீரிபாவம் ஜகதீச்வரர்களுடைய ஸம்பந்தமென்று உத்தரஞ்சொன்னான்; அவன் தானே எனக்கு எம்பெருமானை ஸ்மரிக்கைக்கு விரகு சொல்லவேணும் என்ன; நானுனக்கது சொல்லுகிறேன், நீ யெனக்கு மறக்க விரகு சொல் என்றான். ஆவதென்னென்னில்; ஒரு பதார்த்தத்தைக்கண்டால் அதினுடைய வஸ்துத்வநாமபாக்த்வங்கள் அவன் ஆத்மாத்மதயா லிற்கிலல்லது அவற்றுக்கில்லையிறே; விசேஷணம்சம் தோற்றுகிற்க நினைக்க விரகுகேட்க வேண்டுவதோ என்றபடி.

(**51.** பா. மலைகொண்டுமத்தா அவதாரிகை.)

17. [சகார் ஜகாம ஸாபேக்ஷ:] இத்தை ஸாவேக்ஷ: என்று திருத்தி கீழ்வழியாலே பார்க்கப்போனாரென்று பொருள் சொன்னபடியாலே அத்தை பட்டர் கேட்டருளி அது வேண்டா [illegible]; கீழ்நடந்த பாடத்துக்குப்பொருள் சொல்லலாம் [illegible] என்று இவ் [illegible]

ஙங்களைக்கொண்டு பிள்ளையை முடிசூட்டிக் காணப்பெற்றிலோம் என்னுமபேக்ஷயோடே போனார் என்றருளிச்செய்தார்.

(பாசுர வ்யாக்யானம்)

18. [ஸ்வபாவே ஸௌம்ய திஷ்டந்தி] பெருமாள்மார்பை நிரப்ப வில்லைவளித்துக் கொண்டு நிற்கச்செய்தே கடல்சிவந்தமாலைகளும் ரத்னாபரணங்களுமாய் வந்ததென்று இவ்விடத்தை பட்டர் வாசியாநிற்க புலி சீறினாற்போலே சக்ரவர்த்தித்திருமகன் வந்து சீறிநிற்க இதுக்கிப்போதித்தரிப்பென்? என்ன; கிணற்றில் நீர்கொடுத்து அத்தைச்சுடப்புகாநின்றதோ? நம்மை அச்சமுறுத்திக் கார்யங்கொள்ளுமித்தனை; நம்மை முடியநலியப்புகுகிறாரோ என்று ராமப்ரக்ருதியை யறிவானொருவனாகையாலேகாண் என்றருளிச்செய்தார்.

(52. பா. அழைக்குங்கருங்கடல்)

19. (வார்கின்றதே) பிராட்டியும் ஸர்வேச்வரனும் ஸம்ச்லேஷத்திலே யாரம்பிக்க ஸ்ரீபூமிப்பிராட்டி இதுகண்டு பொறுக்கமாட்டாமையாலே அழுகிறாளாயிருக்கிறது; அவளோடே இவன் கலந்தபோது அவயவியோடே கலந்தாற்போலே இவர்களிருக்கையும் இவர்களோடே கலந்தபோது அவள் தன்னுடைய பாதாரவிந்த்ருஷ்டிகளோடே கலந்தாற்போலே நினைத்திருக்கையும் இவர்களுடைய ஸ்வரூபமாயிருக்கும்; அபரிச்சின்ன விஷயமாகையாலே எல்லாருங்கூடியநுபவிக்கவேணும்; இருவர்க்குப்பாத்தம் போராத க்ஷுத்ரவிஷயங்களிலுண்டான மாத்ஸர்யமிவ்விஷயத்திலேயுண்டாகச்சொல்லிற்று, இது உபபந்நமாம்படியென்? என்ன; இச்சோத்யத்துக்கு முன்புள்ள முதலிகள் — தானுமவனுமான போகத்துக்கு ஸ்ரக்சந்தனாதிகளோ பாதியாயிருக்க என்னையநாதரித்துப்போவதே என்றின்னாதாகிறாள் என்று பரிஹரிப்பர்கள்; ஆளவந்தாரித்தைக்கேட்டருளி வடிவிணையில்லாமலர்மகளையும் நீரிலே நடுங்கும்படி கடலிலேகொண்டுபோவதே! என்று பூமிப்பிராட்டியழுகிறாள் என்று அருளிச்செய்வர். இத்தை பட்டர்கேட்டருளி இதெல்லாம் வேண்டாகாண்; அநுபபந்நமாயிருப்பதோரர்த்தத்தைச் சொல்லவே இதெங்ஙனே கூடும்படி என்று தலைமகள் நெஞ்சிலே பட்டு விசாரித்து நிர்ணயிக்குங்காட்டில் அவன் வந்து கொடுநிற்கும் என்னும் விஸ்ரம்பத்தாலே சொன்னாளாகவமையுங்காண் என்றருளிச்செய்தார்.

(53. பா. வாராயினமுலையாள்)

20. [மூவாமைக்காப்பதோர் மன்னுமருந்தறிவீரில்லையே] இதுக்கு பட்டர் நாட்டிலோராந்தராளிகளில்லையோ என்கிறாள் என்றருளிச்செய்தார். இவ்வார்த்தைகேட்டபோது பிள்ளை திருநறையூரரையருள்ளிட்டாரடைய வித்தராய் நாலைந்துநாழிகைப்போது வேறொரு வார்த்தைக்கிடங்கொடாதே கொண்டாடி அவர்கள் பட்டபாடுகாணும் என்று பிள்ளையருளிச்செய்வர். *வளர்த்ததனால் பயன்பெற்றேன் என்கிறபாட்டை பட்டருளிச்செய்யாநிற்கச்செய்தே பிள்ளை திருநறையூரரையர் அதிலே சிலவார்த்தையைக்கேட்டு இதுக்குமுன்பு ஓராசார்யர்கள் பக்கலிலுமிவ்வார்த்தை கேட்டறியோம் என்றுகொண்டாட; பிள்ளாய்! பண்டுமிப்படிச்லாகித்தாருண்டுகாணும்; ஒரு திர்யக்கை வளர்த்துத்திருநாமங்களைக் கற்பித்து பின்னையது சொல்லக்கேட்டு அதின்காலிலே விழுந்தாருமுண்டுகாணும் என்றார். நீருமக்குவேண்டின கிளியிலே எங்களைச்சிலாகியும்; உம்மையநுபவிக்குமது எங்களுக்கிழவாகாதொழியுமத்தனையே வேண்டுவது என்றாராம். உடையார் ஸுப்ரம்மண்யபட்டர் எம்பெருமானார் கோயிலிலே எழுந்தருளியிருக்கிறகாலத்திலே இங்கேவந்து திருப்புன்னைக்கீழே பெருமாளை ஸேவியாநிற்க எம்பெருமானாரைச் சிலர் வந்தநுவர்த்திக்கிறபடியைக்கண்டு நான் கேட்க வேண்டியிருக்கிறதொரு வார்த்தையுண்டு என்றார்; அதுவென்? என்ன; ஸர்வேச்வரன் திரு

முன்பே நம்மைச்சிலர்; தெண்டனிடாநின்றார்கள் அவர்கள்தான் விலக்ஷிதருமாயிராநின்றார்கள்; நாமும் வேண்டா என்கிறிலோம் இதுக்கடியென் என்ன; இதுதான் கேட்கவேண்டுவதொருவார்த்தையாகிலும் நீர்கேட்கக்கடவீரல்ல என்ன; எனக்கு வாசியென் என்ன; ராஜஸேவை பண்ணித்திரிந்தவரன்றோ? ராஜாவின் பக்கலிலொருவன் கார்யங்கொள்ளவந்தால் அவனுடைய பாதுகைகளையெடுத்துத்தலையிலே வையாநின்றால் அவை நீயென்னைத்தலையிலே வைக்கவேண்டா என்னாதே; அவன்தானவற்றைக் கொண்டாடுகிறானோ? அவற்றைக்கொண்டாடு இரானாகிலவை கார்யம்செய்யவேணுமிறே; ஆனபின்பு இத்தால் ப்ரீதனாவான் ராஜாவன்றோ என்றருளிச்செய்தார்.

(56. பா. வியலிடமுண்ட)

21. (பிரானார்) எம்பெருமானாரெழுந்தருளியிருக்கச்செய்தே ஸ்ரீபாதத்திலே ஸேவித்திருக்கிறவர்கள் தமக்குத்தஞ்சமாக நினைத்திருப்பதென் என்றுகேட்க; எங்கிப்புரத்துநம்பியிருந்தவர் *மூடோயமல்பமதி:* என்கிற க்ஷத்ரபந்துவின் வாக்யமன்றோ என்ன; அதொண்ணாதுகாண் *ப்ராணதே* என்றொன்றுண்டு அதிலே ஸர்வஜ்ஞனாய நிர்மமனாய் விழவேணுமிறே; நம் தலையிலே ஏதேனுமொரு அம்சமொருதுங்கில் செய்து தலைக்கட்டுகையிலுள்ள அருமையாலே அதிமுவோடே தலைக்கட்டுப்படியாயிருக்குங்காண்; இத்தலையிலே அம்சமொருதுங்கில் அது அப்ரதிஷேதத்திலே ஒதுங்குமத்தனையல்லது ஸ்வதந்த்ரமாய் நின்று பலப்ரதமாகமாட்டாதாயிறே யிருப்பது; ஆனால் பின்னை நினைத்திருக்கவேண்டுவதென்? என்ன; காளியனுடைய வார்த்தையை நினைத்திருக்குமத்தனை என்றருளிச்செய்தார்.

(60. பா. முலையோமுழுமுற்றும்)

22. (கடல்மண்ணெல்லாம் விலையோவென மிளிரும்கண்) இத்தை பட்டரருளிச்செய்யாநிற்க எல்லாவவயவங்களுடையவும் நிரம்பாமையைச் சொல்லி இவற்றினுடைய பெருமையைச் சொன்னால் விருபமாயிராதோ என்று ஜீயர்கேட்க; இதிலும் சிறுமையைக் காணும் சொல்லுகிறது; இங்ஙனே சொல்லலாவதுதானுமின்று நாளைகாணும்; பின்னையது தானும் சொல்லவொண்ணாதுகாணும் என்றருளிச்செய்தார்.

(72. பா. சூழ்கின்றகங்குல் அவதாரிகை)

23. இவ்விடத்திலே அமுதனார் ஒரு கதை சொல்லுவர்;—ஒரு ஸாது ப்ராம்மணன் காட்டிலே தனியே வழிபோனானாய் அங்கே ஒருபசு தொடர்ந்து வந்ததாய் ஒரு மரத்திலே யேறியிருந்து இத்தாலேவந்த நலிவைப்போக்கி நம்மை ரக்ஷிப்பாரரோ என்கிற ஸமயத்திலே ஒரு புலிவந்து தோன்றி பசுவையும் கொன்று அதினுடைய ரக்தத்தையும் பானம்பண்ணி இவன் முன்னேவந்து தண்டையை முறுக்கியிட்டிருந்ததாய் பசுவேயாகில் ப்ராணரக்ஷணம் பண்ணிப்போகலாயிற்று; இனி இதின் கையில் வதத்தை நோக்குகையென்றொரு பொருளில்லையாகாதே என்றான் அதுபோலே இங்கும்.

(75. பா. உலாகின்றகெண்டை)

24. (அம்மானித்யாதி) பிள்ளைதிருநறையூரரையர் அடியார் நிலாகின்ற வைகுந்தமோ வையமோ என்றிருக்கிறார்காண் என்று பணிப்பர்.

(80. பா. சீரரசாண்டு)

25. (எம்மை நீத்து வஞ்சித்தோரரசே) உபய விபூதிக்கும் தனித்தனி கடவனாவோபாதி யென்னையகற்றி முடிக்கைக்குத் தனிமுடி சூடியிருக்கிறவனே என்று பிள்ளான்.

என்னையல்லது செல்லாதாரைப்போலே கலக்கவல்லாரொன்றோபாதியில்லை என்றிதுக்குத்தனிமுடி சூடியிருக்கிறானாயிற்று [illegible]

(82. பா. எரிகொள் செஞ்ஞாயிறு அவதாரிகை)

26. ஜீயர் எனக்கிப்பாட்டு அநபிமதமாயிருக்கும் என்றருளிச்செய்வர். உருவெளிப்பாட்டிலே ஸர்வேச்வரனுடைய திருக்கண்கள் பாதகமாகிறபடியைச் சொல்லுகிறது, இவனுடைய ஆற்றாமையுண்டாகிலிறே இப்பாசுரம் சொன்னால் ஸாத்மிப்பது.

(83. பா. விளரிக்குரலன்றில் அவதாரிகை)

27. பட்டரிவ்விடத்தையருளிச்செய்யாநிற்க நஞ்சீயர் ஸ்ரீராமாயணத்திலிவ்விடத்துக்குப்போலியாக வருளிச்செய்யலாமிடமுண்டோ என்றுகேட்க இளையபெருமாள் பிராட்டியைக் கொண்டுபோய்விட்டுப் போந்த வநந்தரம் அவனுடைய ஆர்த்தத்வனிகேட்ட ஸ்ரீவால்மீகி பகவானுக்கு அத்திருத்தாயார் படியுண்டு என்றருளிச்செய்தார்.

(பாசுரவ்யாக்யானம்)

28. (முன்றில் பெண்ணை) முன்றிலென்று முற்றத்துக்குப்பேர்; வாசலுக்கும்பேர்; முற்றத்தில் பனை நடலாமோ என்று இவ்விடத்தை நிர்வஹியாநிற்க வங்கிப்புரத்து நம்பியைச் சிலர் கேட்க அதுவோ இவள்கார்யம் தளிரும் முறியுமாய்ச்செல்லுகிறது என்று பணித்தார்.

(85. பா. மாணிக்கம்கொண்டு)

29. ஆழ்வான் திருக்கோட்டியூர் நம்பிபாடுநின்றும் வந்தவனந்தரத்திலே, பிள்ளாய்; எனதுள்ளான் என்னவேண்டுமவஸ்தையிலே அடியேனுள்ளான் என்று ஆழ்வார் அருளிச்செய்தபடி கண்டாயே என்று பணித்தான்.

(94. பா. மைப்படிமேனியும்)

30. (மைப்படிமேனியும்) பட்டர் ஒருநாள் இவ்விடத்தை யருளிச்செய்யாநிற்க பிள்ளை விழுப்பரையரும் ஆப்பான் திருவழுந்தூரரையருமிருந்தார்களாய் அநுஸந்தித்தார் நெஞ்சிலே இருளும்படியான திருமேனியும் என்றருளிச்செய்தார்; நஞ்சீயரிருந்தவர் இன்னாரென்றறியேன் என்னப்பண்ணிற்று என்றநுபாஷிக்க; இவ்வார்த்தை சொன்னார் ஆர் என்ன; ஜீயர் என்று அவர்கள் சொல்ல நூற்றுக்காதத்தவ்வருகே பிறந்து நமக்கித்தையுபகரிப்பதே, என்று கொண்டாடியருளினார்.

(95. பா. யாதானுமோர் அவதாரிகை)

31. இவ்விடத்திலுருத்தோறும் குறியாக ஜீயருளிச் செய்வதொரு வார்த்தையுண்டு; பட்டர் திருக்கோட்டியூரிலே யெழுந்தருளியிருக்கச்செய்தே அங்கே ராமாநுஜ தாஸரென்பாரொருத்தர் திருவிருத்தமருளிச்செய்யவேணும் என்ன; நம்பெருமாளைப்பிரிந்த சோகத்தாலே செவிசீபாய்த்திருக்கையாலே நான் ஒன்றுக்கும் க்ஷமனல்லேன்; ஜீயரே நீர் சொல்லும் என்றருளிச்செய்ய; ஜீயருளிச்செய்து கொடுபோராநிற்க வளவன் பல்லவதரையரென்று திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாதத்தை யுடையாரொருவருமித்தை யநுஸந்தித்துக்கொண்டு போந்தாராய் அவரிப்பாட்டளவிலே வந்தவாறே கண்ணும் கண்ணீருமாய் புலகிதகாத்ரருமாயிருக்கிறவித்தைக் கண்டு இப்பாட்டில் வார்த்தை சொல்லுவதினி ப்ரஸங்கமாத்ரத்திலே ஸித்தாவீர் இதென் என்ன; நம்பி எனக்கு ஹிதமருளிச்செய்த வநந்தரத்திலே எம்பெருமான் திருமுன்பே இப்பாட்டை நாள்தோறும் விண்ணப்பம் செய் என்றருளிச்செய்தார். அத்தை யிப்போது ஸ்மரித்தேன் என்ன; அவரிதுக்கேதேனும் வார்த்தையருளிச்செய்ததுண்டோ என்ன; எனக்கவை போகாது; இப்பாசுரத்தை நினைத்திருப்பன் என்றார். நம்பி யாதரித்தபாட்டாகாதே என்றிப்பாட்டை ஐந்தாறு நாழிகைப்போது கொண்டாடினாராம்.

(99. பா. ஈனச்சொல் அவதாரிகை)

32. ஆழ்வான் திருவாய்மொழி நிர்வஹிக்கப்புக்கால் பிள்ளையுறங்கா வில்லிதாஸர் கண்ணும் கண்ணீருமாய் அத்தையித்தைப்ரஸங்கித்து ஸிதிலராய்க்கிடப்பர்; அத்தைக் கூரத்

தாழ்வான்கண்டு மஹாபாஷ்யம் கற்று சதுரச்ரமாக வொன்றை நிர்வஹிக்கிற வெங்களைப் போலன்றிக்கே பகவத்குண ப்ரஸங்கத்திலே சிதிலராம்படி பிறந்த உம்முடைய ஜந்மமுமொரு ஜந்மமே! என்று கொண்டாடினான்.

ஆழ்வான் வீராணத்திலொரு பெண்பிள்ளையைக் குடங்காலிட்டு *கள்வன்கொல்யா னறியேன் என்று சந்தையிட்டு மேலடி தோற்றாமல் மோஹித்தாராம்; இப்படிப்பட்டவரிறே தன்னை வன்னெஞ்சராகச் சொல்லுகிறார்.

ஸ்வாமிகள் திருமழிசை தாஸரும் நஞ்சீயருமாகத் திருவாய்மொழியோதாநிற்க ஆண்டான் தன்னைக்கண்டு நஞ்சீயரெழுந்திருக்க; அதுவேண்டா, கோயில் கூழைத்தனமடிக்கிற படியிதுவோ என்ன; திருவாய்மொழியோதிற்றும் என்றாராம். பகலெல்லாம் பாஷ்யத்திலங்ய பாராய் இரவில் பள்ளியேறினால் சந்தைசொல்ல வாராயோவென்பர்; முதல்சந்தைக்குப் புலகிதகாத்ரராவர்; இரட்டித்தால் சிதிலராவர்; எங்கேனுமொருகால் புக்காராகில் நாலிரண்டு ஒலியல்கொண்டு துடைக்கும்படியாயிற்றுக் கண்ணநீர் வெள்ளமிடுகிறபடி.

நம்பெருமாள் அமுதுசெய்யுமத்தை முன்னும் பின்னுமெனக்குக் காட்டிக்கொடு போங்கோள் என்று நியமிக்க அவர்களும் கருத்தறியாமற்படி செய்துகொண்டு ஆறுமாஸம் போலே சென்றபின்பு ஒருநாள் பார்த்து இத்தை யொருநாளாகிலும் குறியழித்திட்டுவைத்தாலாகாதோ என்றருளிச்செய்தார். கிடாம்பியாச்சான் ஆழ்வானோடே திருவாய்மொழி கேட்கும் நாளிலே ஒருநாள் தாழ்த்துப்புக என் நீ வைகினாய் என்ன; ஆழ்வான்பாடே திருவாய்மொழிகேளாநின்றேன் என்ன; இன்றென்ன திருவாய்மொழி நிர்வஹித்தான் என்று கேட்டருள; பிறந்தவாறும் என்று விண்ணப்பஞ்செய்ய; அதில்சொன்ன விசேஷமென் என்ன; ஒன்றும் விசேஷமில்லை என்ன; ஆகில் நீ கேட்டபடியென் அவன் சொன்னபடியென் என்ன; நிர்வஹிப்பதாக ஆரம்பித்து இயல்சொல்லி அநந்தரம் ஆழ்வாருடைய பாரவச்யத்தை யநுஸந்தித்து நெடும்போது கண்ணுங்கண்ணீருமாயிருந்து இவ்வாழ்வாரொருவரே; இவர்க் கோடுகிற ஸாவஸ்ருத்திக்கு நாமிருந்து பாசுரமிடுகையாவதென் என்று இற்றைக்கு விடலாகாதே என்றுவிட்டான் என்ன; கேட்டருளி எம்பெருமானார் என்ன பரமசேதநனோ என்றருளிச்செய்தார்.

(பாசுரவ்யாக்யானம்)

32. *தத்து ஸமந்வயாத்* என்கிற ஸூத்ரத்திலே ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்கநுபயுக்தங்களான வேதாந்த வாக்யங்கள் புருஷார்த்த பர்யவஸாயியல்லாமையாலே ப்ரஹ்மணி ப்ரமாணமாகமாட்டாதே என்ன அவை நிரதிசயாநந்தரூப ப்ரஹ்மத்தை ப்ரதிபாதிக்கையாலே அவற்றுக்கு ப்ரஹ்மணிப்ராமாண்யம் கூடுமென்று பாஷ்யகாரரருளிச்செய்தார்.

(அல்லாவில்லை) ஒருவிசை திருக்கோட்டியூர்நம்பி திருநாளுக்கெழுந்தருளின ஸமயத்திலே இவ்வர்த்தத்தை யருளிச்செய்வதாக ஒரு ஏகாந்த ஸ்தலத்திலே எழுந்தருளி எம்பெருமானாரையும் கூடக்கொண்டு புக்காராய் திருப்பணிசெய்வானொருவன் உறங்கிக் குறட்டை விடாநிற்க அவனைக்கண்டு அநர்த்தப்பட்டோம் என்று அவ்விசை தவிர்ந்து மற்றைவிசை அருளிச்செய்யக் கேட்டருளி எம்பெருமானார் ஆழ்வானகத்திலே அமுதுசெய்திருக்கிறவளவிலே உச்சி வெய்யிலிலே தண்டையுங்கொண்டுவந்து புகுந்து நம்பி இவ்வர்த்தத்தை ஒருவர்க்கும் சொல்லாதேகொள் என்றருளிச்செய்தார்; உனக்குச் சொல்லாதிருக்கமாட்டுகிறிலேனிறே என்று ஸஹகாரிநைரபேக்ஷ்யத்தை அருளிச்செய்தார். ... ... ....

# திருவாசிரியம்.

(1. பா. செக்கர்மாமுகில்)

33. (கவர்தலை) அனந்தாழ்வான் திருக்கோட்டியூருக்கு நடந்த விடத்திலே பட்டரைக் கண்டு அவர் திருமேனியிலே இப்படி செய்தானாம். ஆண்டாளுக்கு முந்துற ஒரு பிள்ளையுண்டாய் அவனையிழக்க, அங்ஙனே செய்யவொண்ணாது; இவன் ஜீவிக்கவேணும் என்று எம்பெருமானார் பெரியபிராட்டியாருக்கு சீராட்டி மஞ்சள்நீர்குடித்த பிள்ளையாக வளர்க்க வேணும் என்று காட்டிக்கொடுத்தருளினாராயிற்று. அந்த வாஸனையாலே 'பெரியபிராட்டியார்மகன்' என்று தான் பட்டரை அனந்தாழ்வான் சொல்லுவது.

(6. பா. ஒழ உலகினதியல்வே)

34. (முதற்பெருங்கடவுள்) ஆத்மப்ரசம்ஸை பண்ணினதால் 'த்வம்ஸ' என்று பூமியிலே விழும்படி சபித்தானென்று இவ்விடத்தை பட்டர் வாசித்துப்போந்த காலத்திலே, இந்த்ரன் தன்னையாச்ரயித்துப்பெற்ற உத்கர்ஷமாயிருக்க, அர்த்தாஸநத்திலேயிருந்தது பொறுக்கமாட்டாமை ஆத்மப்ரசம்ஸை பண்ணினாய் என்றொரு வ்யாஜத்தை யிட்டுத் தள்ளினானாயிருந்தது; இதுதான் வேதோபப்ரும்ஹணார்த்தமாக ப்ரவ்ருத்தமான மஹாபாரதத்திலே எவ்வர்த்தத்தினுடைய வைசத்யமாக எழுதிற்று? என்றுகேட்க; தான் தன்னோடொக்க உத்கர்ஷத்தைக்கொடுக்கவல்லதுவும் அதைப்போக்கவல்லதுவும் பரதேவதையான பின்பு, ஆச்ரயிக்கப்படுமதுவும் பரதேவதை; அல்லாதார் ஆச்ரயணீயரல்லரென்னுமிடம் ப்ரகாசிக்கைக்காக என்றருளிச்செய்தார்.

(பெரியதிருவந்தாதி 9. பா. நுமக்கடியோம்)

35. [நும்மை—அருகும் சுவடும் தெரிவுணரோம்—நுமக்கு அன்பே மிகபெருகும் இதுவென்பேசீர்] இது ஜீயர் பிள்ளை திருநறையூரரையர் பக்கலிற்கேட்டதாகப் பிள்ளையருளிச் செய்தார்.

(61. பா. இறைமுறையான்)

36. (இறை) லோகயாத்ரையை அநுஸந்திக்கப் புக்காலும் அவனை முன்னாகவல்லது காணமாட்டாமை சொல்லுகிறது. சிறியாச்சான், சப்தாதிவிஷயங்களில் நின்றும் நாம் மீளமாட்டாதாப்போலே ஆழ்வார்கள் பகவத் விஷயத்தில் நின்றும் மீளமாட்டார்கள் என்று பிள்ளைக்குப் பணித்தான்.

(63. பா. பின்துரக்கும்)

37. பின்துரக்கும்த்யாதி பின்னே துரக்கிற காற்றையிழந்த சூல்கொண்டல, இப்படி நெடுங்கடலிலே புக்குக்கிடந்த வாய்மையன்—மெய்யான ஒப்பையுடையன் என்று. வாய்மைத்து என்றுக்கை வாய்மையனென்று வசனத்தை மாறுடிக்கொள்ளவுமாம்; பருச்செவியுமீர்ந்தபரன்படி என்று அத்யாஹரித்துக்கொள்ளவுமாம். ஒன்றுக்கு வசநவ்யத்யயம் பண்ணவேணும், ஒன்றுக்கு படி என்று அத்யாஹரிக்கவேணும்; இரண்டுமிறுக்குமொழிய உபமாநோபமேயங்களை மாறாடாதே சேர யோஜிக்கப்போம் என்று ஜீயருக்கு விண்ணப்பம் செய்தபடி.

(82. பா. தெரிந்துணர்வு)

38. (கரந்துருவித்யாதி) பெருமாள் மாயமானையெய்து மீண்டெழுந்தருளுகிறபோது அடிக்கொதித்து நடக்கமாட்டாமை தளிர்களை முறித்திட்டு அதின்மேலே எழுந்தருளினார் என்று ஒருவன் கவிபாட, எம்பெருமானார் கேட்டருளி மாறியிடுகிற திருவடிகளிலே என் தலையை வைக்கப்பெற்றிலேன் என்றருளிச் செய்தார்.

(சிறியதிருமடல்—அதுகேட்டுக்காரார்)

39. (அதுகேட்டு) பகவத்விஷயங்களைக் கேட்கைக்கு ருசியுண்டென்றறிவித்தனையிறே வேண்டுவது, ஆசார்யர்கள் தாங்களேவந்து சொல்லுவர்களிறே. முன்புத்தை ஆசார்யர்கள் பகவத்விஷயம் சொல்லும்போது நாலிரண்டுபேருக்காயிற்றுச் சொல்லுவது, அதுதானும் அவர்கள் படியறிந்தால் சொல்லுவது; அங்ஙனன்றிக்கே ருசியுடையார் என்று தோற்றினவளவிலே சொல்லுவர் எம்பெருமானர்; அப்படி காணுமிக்கட்டுவிச்சியும்.

(சிறியதிருமடல்—சீரார்கலையல்குல்)

40. முற்காலத்திலே பெரிய திருநாள் ஸேவித்த முதலிகள் திருநாள் ஸேவித்த இரட்டை என்று மேலைத்திருநாள் வருமளவும் அவ்விரட்டையை மடித்துக் கொடியிலேயிட்டு வைத்துப் பார்த்துப்பார்த்துக்கொண்டிருப்பர்கள்.

(சிறியதிருமடல்—உள்ளளவுங்கைநீட்டி)

41. தாரார் தடந்தோள்களுள்ளளவும் கைநீட்டினன் என்று இவனதிகதபடியெங்ஙனே? என்று ஜீயர் பட்டரைக்கேட்க; கோயிற்சாந்தைக் குடத்தின் விளிம்பிலே தடவினாள் போலே காணும் என்றார்.

(சிறியதிருமடல்—அருகிருந்தமோரார்குடமுருட்டி)

42. பட்டர் ஆழ்வார்கள் திருமண்டபத்திலேயிருந்து திருமடலருளிச்செய்யாநிற்கச் செய்தே இவ்விடத்தே "ப்ராஹ்மணர் தனத்தையெல்லாம் பாழேபோக்கினன்" என்றார்.

(சிறியதிருமடல்—வெங்நரகம் சேராவகையே சிலைகுனித்தான்)

42. வளைந்தவில்லுங்கையுமாய் முஷ்டியிலே நின்றபெருமாளைக் கண்டவன், மேலே போய் ஒரு நரகாநுபவம் பண்ணவேண்டா என்னும்படி வயிறெரித்தலோடே எல்லா வநுபவமும் இங்கே அநுபவிக்கும்படி பண்ணினன். பூர்வாச்ரமத்திலே நஞ்சீயரெழுந்தருளியிருக்கச்செய்தே பட்டர் திருமடலருளிச்செய்கிறபோது இவ்விடத்துக்கு இவ்வார்த்தையருளிச்செய்தாரென்று சொல்ல, இவ்வார்த்தையருளிச் செய்தவரைக் காணவேணும் என்று காணும் பட்டர் ஸ்ரீ பாதத்தில் நஞ்சீயராச்ரயித்தது.

(பெரியதிருமடல் அவதாரிகை)

43. ஸந்ந்யாஸதர்மத்தை மடல் என்று ஆளவந்தாரருளிச்செய்தார்.

இயற்பாவியாக்கியான ஐதிஹ்ய
நிர்வாஹ ஸங்க்ரஹம்
முற்றிற்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.